# விவேகமும் விழிப்புணர்வும் !

**(சுதந்திரம் நமது பிறப்புரிமை)**



**சுவாமி பிரபஞ்சநாதன்**

# விவேகமும், விழிப்புணர்வும்!

========================

ஹரி ஓம்!

அனைவருக்கும் வணக்கம்.

**சுதந்திரம் நமது பிறப்புரிமை - 15.08.2021.**

தனி மனித சுதந்திரம் என்பது அவனது பிறப்புரிமை.

அதை இன்றைய அநாகரீக அரசியல் தகர்க்கப் பார்க்கின்றது.

நாகரீகம் என்ற பெயரில் இவர்கள் மேற்கொண்டுள்ள அனேக காரியங்கள் அறியாமை மக்களை அதிகம் துயரத்திற்கு உட்படுத்துகிறது.

ஒருபுறம் நோய் தடுப்பு நடவடிக்கையாக கொள்ளைக்கு போவதுப் போன்ற முகத்தை மறைக்கும் முகமூடி. அத்துடன் அவசியம் அவனது உடம்பை உருக வைக்கும் ஊசி மருந்துகள் என மனிதர்களை மெல்லக் கொல்லும் விஷத்தின் வாயிலாக அவர்களின் வாழ்க்கையில் விளையாடுகிறார்கள்.

சாதாரண பாமரன் ரேசன் கடைகளில் வரிசையில் நின்று வயிற்றுக்கான அரிசி, கோதுமை வாங்கும் பொழுது, அந்தக் கடைகளில் அவர்கள் வைத்திருக்கின்ற ரேசன் கார்டு பதிவு எந்திரத்தில் ஒவ்வொருவரும் அவர்களது கைவிரல் ரேகைகளை அவசியம் பதிய வேண்டும்.

அதனால், ஒருவரிடம் உள்ள கொரோனா மற்றொருவருக்கு பரவாது.

அவ்வாறே, பஸ் பயணங்களின் போது, ஒருவரை ஒருவர் முட்டி, மோதிக் கொண்டும், ஒருவர் மூச்சுக் காற்றை மற்றவர்கள் சுவாசித்தாலும் கொரோனா மற்றவர்களுக்கு பரவாது.

மேலும், பணம் ஒருவரிடம் இருந்து மற்றொருவருக்கு கை மாறும் பொழுதும், கொரோனா ஒருவரிடம் இருந்து, மற்றொருவருக்குப் பரவாது.

ஆனால், பள்ளியில் படிக்கின்ற குழந்தைகள் மட்டும் ஒருவருக்கு ஒருவர் கொரோனாவை பரப்பிவிட்டு விடுவார்கள்!?

அதுமட்டும் எப்படி?

யாரைக் கொல்ல இந்த சதி?

நம்முடைய எதிர்கால இந்தியாவை முடக்கி, மக்களை முட்டாள்களாக்கும் எண்ணம் யாருக்கு உண்டாகி இருக்கின்றது?

ஒன்றுமே புரியவில்லை,

இந்த கொரோனா மர்மம்.

மக்களே விழித்துக் கொள்ளுங்கள்.

இது முற்றிலுமாக நம் பாரத தேசத்தின் பெருமையை குழைக்கும் மதியற்றவர்களின் மட்டமான செயல்கள் எனலாம்.

அத்துடன் அந்த "**சத்**" என்ற இருப்பின் இயல்பில் எப்பொழுதும் இருக்கின்ற, நம்மிடம் உள்ள "**சித்**" என்ற அறிவைக் கொண்டு, எப்பொழுதும் ஆனந்தமாக இருக்கும் சச்சிதானந்த சொரூபம் ஆகிய நம்மை மனதினாலே ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களில் சிக்கிய சிலர், அவர்களும் பயந்துக் கொண்டு, நம்மையும் பயப்படுத்திக் கொண்டு, மக்களை நிம்மதியாக வாழ விடாமல் செய்கின்ற படு பாதகச் செயல்கள் இவைகள் எனலாம்.

அதிலே, அவசியம் அனைவரையும் கட்டாயப்படுத்தி தடுப்பூசி போட்டுக் கொள்ள வேண்டும் என்று கூறும் அரசியல்வாதிகளும், அரசு

அதிகாரிகளும் மக்களை மேலும், மேலும் முட்டாள்கள் ஆக்கப் பார்க்கின்றார்கள்.

"**தனி ஒருவனுக்கு உணவில்லை எனில், இந்த ஜகத்தினை அழித்திடுவோம்**!" என்றான் ஆங்கிலேய அரசிடமிருந்து நமக்கு சுதந்திரம் வாங்கிக் கொடுக்க விரும்பிய அன்றைய பாரதி.

அவனே இன்று உயிரோடு இருந்திருந்தால், "**தனி மனிதனுக்கு வாழ தன் நாட்டில் சுதந்திரம் இல்லை எனில், இந்த ஜகத்தினை அழித்திடுவோம்**!" என்று பாடியிருப்பான்.

இன்றைய அரசாங்கமும், அவர்களால் நியமிக்கப்பட்ட அதிகாரிகளும் மக்களை கட்டாயமாக தடுப்பூசி போடச் சொல்வது என்பது எந்த விதத்தில் அதன் நம்பகத் தன்மையை உறுதிப்படுத்தி அவைகள் நிரூபிக்கப்பட்டுள்ளது...?

அதை மக்களிடம் எப்படி உறுதியாகக் கூற முடிகின்றது...?

இவர்களது தடுப்பு நடவடிக்கைகள் எல்லாம் எந்த அளவிற்கு சரியாக இருக்கின்றது?

எதை, எதை இவர்களால் உண்மையிலேயே கட்டுப்படுத்த முடியும்?

அப்படியானால், மக்கள் இந்த கொரோனாவுக்கு பயந்துக் கொண்டு, எதையுமே செய்யாமல் இருக்க முடியுமா?

மக்கள் மூச்சு விடாமல் இருக்க முடியுமா?

இவர்கள் கூறுவதுப்போன்று, முக்கை மூடியும், தடுப்பூசி போட்டுக் கொண்டவர்களுக்கும் கொரோனா வருவதில்லையா?

அல்லது

அவ்வாறு தடுப்பூசி போட்டுக் கொண்டவர்கள் இறக்கவே மாட்டார்களா?

சாதாரணமாக இறப்பவர்களை கொரோனா நோயினால் இறந்தார்கள் என்று கூறுவதுப் போன்று, தடுப்பூசியினால் இறந்தவர்களை இந்த நோயினால்தான் இறந்தார்கள் என்று கூறுவதும் இவர்களுக்கு ஒன்றும் புதிதல்ல.

ஏற்கனவே போடப்பட்ட பல தடுப்பூசிகளின் வாயிலாகத்தான் பல்வேறு உடற் பிரச்சனைகளை (தைராய்டு நோய்கள், சர்க்கரை நோய்கள் போன்ற

சுரப்பிகளை பாதிக்கக் கூடிய பல நோய்கள்) இன்றைய மக்கள் சந்திக்கின்றார்கள் என்று எளிதாகக் கூறிவிடலாம்.

நமது பாரத நாட்டின் பாரம்பரிய மருத்துவ முறைகளான **ஆயுர்வேதம், சித்தா, யுனானி** போன்றவைகளைப் புறந்தள்ளி விட்டு, இவர்கள் கண்டு பிடித்த புதுமையான ஆங்கில மருந்தை மட்டும் செலுத்திக் கொண்டால் கொரோனா வந்தாலும் உயிர் இழப்பு உண்டாகாது என்கின்றனர்.

அத்துடன், இந்தியாவில் உற்பத்தியாகும் மருந்துகளை விட, மற்ற நாடுகளில் உற்பத்தி செய்யும் மருந்துகள் மட்டுமே மதிப்பு வாய்ந்தது என்பதுப் போன்ற பிரச்சாரங்கள் எல்லாம் யாரை ஏமாற்றுவதற்கு என்றும் தெரியவில்லை.

உண்மையில் கொரோனா கிருமிக்கு இவர்கள் கண்டு பிடித்து மருந்துகளை மக்களுக்கு கொடுத்துக் கொண்டு இருக்கும் பொழுதே, அந்த கொரோனா உருமாற்றம் அடைகிறது, அதனால் இந்த மருந்துகள் போதாது, இன்னும் சில தடுப்பூசிகளை இரண்டாவது, மூன்றாவது என போட்டுக் கொண்டே இருக்க வேண்டும் என்றும் மக்களை வற்புறுத்துகின்றனர்.

இந்த புதிய தடுப்பூசிகளினால் உருமாறும் கொரோனாவை இவர்கள் கட்டுப்படுத்துகின்றார்களோ

இல்லையோ, மக்களை நிச்சயம் மருத்துவமனைகளில் வைத்து, பல மடங்கு பணம் பறித்து விடுவார்கள் என்பது மட்டும் நன்றாகத் தெரிகிறது.

அதுமட்டுமா?

பொதுவாக மனிதர்களிடம் இயல்பாக இயங்கிக் கொண்டிருக்கின்ற இன்றியமையாத பல்வேறு நிணநீர் சுரப்பிகள் எல்லாம், இவர்களது மருந்துகளினால், இன்னும் தாறுமாறாக சுரக்க ஆரம்பித்து, இன்னும் சில புதிய நோய்களுக்கு வித்திடுகின்றன.

இவர்கள் கூறுவதுப் போன்று, இந்த தடுப்பூசிகளினால், வருகின்ற கொரோனாவை அழிக்கும் வழிமுறைகளை செல்கள் சேகரித்து, பதிய வைத்துக் கொண்டுள்ள செல் மெமரிகள் எல்லாம், புதியதாக உருமாற்றம் அடைந்த கொரோனாவை ஏற்றுக் கொண்டு, அவைகளுக்கு ஏற்றவாறு செயல்பட முடியுமா?

அந்த செல் மெமரிகள் உடலை தாக்கும் புதிய உருமாற்றம் அடைந்த கொரோனாவால் குழப்பம் அடையாதா?

அப்படி, அந்த பழைய கொரோனா கிருமிகளைப் பற்றிய செல்களின் இந்த தடுப்பூசிப் பதிவுகள் புதிய கொரோனாவுக்குப் பயன்பாடாது

என்றால், புதியதாக உருமாறும் கொரானாவுக்காக எத்தனை தடுப்பூசிகளை மனிதன் மாற்றி, மாற்றி போட்டுக் கொள்ள முடியும்?...

அவ்வாறு, ஒவ்வொரு கிருமிக்கும் ஒரு தடுப்பூசி என்று போட்டுக் கொண்டே போனால், இந்த மனித உடல்தான் தாங்குமா?

சிந்தித்துப் பாருங்கள்!

மனிதனை விடுத்து, மற்ற சீவராசிகள் எப்படி வாழ்கின்ற என்பதை எப்படியாவது சிந்தித்துப் பாருங்கள்!

வறுமையில் இருப்பவர்களுக்கு இந்த தடுப்பூசி மருந்துகள் இலவசம் என்றும், வசதியானவர்களுக்கு அதிகப்பணம் என்றும் கூறி, ஏழை, எளியவர்கள் எல்லோருக்கும் இலவசமாகப் போடும் தடுப்பூசிக்கு உண்டான தொகையையும் சேர்த்து, மற்ற பணம் படைத்த பணக்காரர்களிடம் பறித்துக் கொள்கின்றனர்.

அந்த அளவிற்கு தடுப்பூசியின் விலையை நிர்ணயித்துள்ளனர்.

உண்மையில் இந்த உலகம் எதை நோக்கிப் போகின்றது?

நாம் எங்கே போய்க்கொண்டிருக்கிறோம்?

யாராவது ஒருவர் சற்றே ஆழ்ந்து யோசித்துப் பார்த்திருக்கிறீர்களா?

அப்படி யோசித்துப் பார்த்தால், தனி மனிதன் தன் சுயத்தை அறியாமல், சுயநலமாக வாழ முற்பட்டதின் விளைவைத்தான், இந்த மனித சமுதாயம் இன்று சந்திக்கின்றது என்பதை அறிய முடியும்.

இந்த சுய நலம் கொண்ட மனம் எங்கு உருவாக்கப்படுகிறது...?

அதன் ஆதார தொழிற்சாலை எது? என்று கேட்டால், அதுவே, இன்றைய கல்விச்சாலைகள் என்றால் அது மிகையாகாது.

ஏனெனில், மாணவர்கள் கல்வி கற்க வரும் பொழுதே, அவனை விட இவன் நன்றாகப் படிக்க வேண்டும் என்ற பொறாமைக் குணம் அங்கே அடிக்கடி புகுத்தப்படுகிறது.

அத்துடன் விட்டார்களா?

இந்த கல்வியைக் கற்றால் கை நிறைய இவ்வளவு சம்பாதிக்கலாம் என்றும், இந்தத் துறையைத்

தேர்ந்தடுத்தால் எளிதாக பணம் பார்க்கலாம் என்றும் எடுத்துக் கூறுகின்றார்கள்.

அவ்வாறு எடுத்துக் கூறி, ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான அறிவுடன் அவன் செதுக்கப்பட்டு, தயாராகி வருகின்ற மாணவன் உண்மையான தன் சுய சொரூபத்தை அறியாமல், சுயநலமாகவே அதிக பணம் சம்பாதித்து வாழவே ஆசைப்படுகின்றான். அதற்கான செயல்களில் ஈடுபட முற்படுகின்றான்.

அதன் விளைவு?

இன்று எங்கும் எதிலும் இலஞ்சம், ஊழல், அதை அப்படியே ஏற்றுக் கொண்டு காரியம் சாதித்துக் கொள்ளச் சொல்லும் அதிகாரிகள்.

இவர்கள் எல்லாம் என்ன கல்வி கற்றுக் கொண்டுள்ளார்கள்?

இந்த சுயநலக் கல்வியைத்தானே கற்றார்கள், அதனால் அவர்கள் அப்படித்தான் இருப்பார்கள் போலும்?!

அதனால்தான் இவர்களுக்கு சுதந்திரம் என்றால் என்ன? என்றுகூட தெரியவில்லை.

ஆம்! நம்முடைய பாரததேசம் அடைந்த இந்த சுதந்திரம், இரத்தம் சிந்திய நம் முன்னோர்கள் பலரின் இன்றியமையாத தன்னலமற்ற தன்மையினால் கிடைத்த சுதந்திரம்.

அத்தகைய அவர்களின் வாழ்க்கை முறைகளை வரலாற்றில் இருந்து மறைத்துவிட்டு, இன்றைய அரசியல்வாதிகளின் வாழ்க்கை வரலாறுகளையும், அன்றைய அராஜக ஆங்கிலேயர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் இன்றைய இளைஞர்கள் படித்துக் கொண்டிருந்தால், எப்படி இவர்களுக்கு சுதந்திரத்தின் அருமை புரியும்?

அத்துடன் சுதந்திர தினத்தினைக் கொண்டுகின்றோம் என்று கூறிக் கொண்டு, இலவசமாக எதையாவது கொடுப்பதும், அதை வாங்கிக் கொள்ள சிலரை கட்டாயப்படுத்தி, அவர்களை இலவசத்திற்கு ஆசைப்பட வைத்து கெடுப்பதும், என எதையாவது செய்து புகழ்பெற விரும்புகின்றார்களே தவிர, உண்மையில் சுதந்திரம் என்றால் என்ன? என்று எவரும் அறிந்தார்கள் இல்லை.

அதுவும், இன்றைய இளைய தலைமுறைகளாக உள்ள, இந்தியாவின் இன்றியமையாத வாரிசுகளான நம் குழந்தைகளின் எதிர்காலத்தில் எல்லோரும் எளிதாக விளையாடுகின்றார்கள்.

குழந்தை பிறப்பதுற்கு முன்பாகவே பல தடுப்பூசிகள், குழந்தை பிறந்த பிறகு சில தடுப்பூசிகள், அத்துடன் இன்று குழந்தைகள் படிக்கின்ற பள்ளிகளில் கட்டாயமாகப் பல தடுப்பூசிகள் போடப்படுகின்றன. அவசியம் போட வைக்கின்றனர்.

சரி! இந்த தடுப்பூசிகள் எல்லாம் வருகின்ற நோயைத் தடுத்திருக்க வேண்டுமே? ஏன் தடுக்க வில்லை?

காரணம் கேட்டால், அது வேறு விதமான நோய் கிருமிகள், இது வேறுவிதமான நோய் கிருமிகள் என்று எளிதாக ஏமாற்றி சமாளித்து விடுகின்றனர்.

அத்துடன் இந்த நோய் கிருமிகளும் அப்படியே இருப்பதில்லை உருமாற்றம் அடைகின்றன என்றும் கூறி புதிய, புதிய தடுப்பூசிகளை மக்களிடையே புகுத்துகின்றனர்.

அப்படியானால், கிருமிகள் உருமாறிக் கொண்டிருப்பதைப் போன்று, அதாவது பன்றியில் இருந்து மனிதன் வந்தான் என்பதைப் போன்று, மீண்டும் மனிதனை பன்றியாக மாற்றாமல் ஓயமாட்டார்கள் போலுள்ளதே?

என்ன ஒரு அறியாமைக் கல்விமுறை!?

சற்றே சிந்தித்துப் பார்த்து, சுதாகரித்துக் கொண்டீர்கள் என்றால், எதிர்காலத்தில் மனித இனம் இன்பமாக இன்னும் சில காலங்கள் இருக்கும்.

இல்லையேல்!, இங்கு **‘அறிவு’** என்று ஏற்றி வைத்துக் கொண்ட ஏராளமான எண்ணங்களினால், இருந்த இடம் தெரியாமல் இந்த மனித இனம் அழிந்து விடும்.

ஆம்! அதற்கு ஆதாரம் **ஹரப்பா, மொகஞ்சதாரோ** நாகரீகம் என்பதை எல்லோரும் ஏற்கனவே அறிவார்கள்.

ஆகவே. இந்த அரசு எடுக்கும் கட்டாய நடைமுறைக்கு எதிராக, தனிமனித சுதந்திரம் பறிக்கப்படாமல் இருக்க, இனியாவது எல்லோரும் விழித்துக் கொள்ளுங்கள்.

இதற்கான தடுப்பூசி போடும் தடுப்பு நடவடிக்கைகளை நல்ல உள்ளம் கொண்ட நல்ல அதிகாரிகளும், வழக்கறிஞர்களும் மேற்கொள்ள வேண்டும்.

அத்துடன் எல்லாம் வல்ல ஈஸ்வரனே இந்த உலகை அழிக்கும் தொழில் செய்வதுப் போன்று, இந்த உலக மக்களைக் காக்கும் தொழில் செய்யும்

ஈஸ்வரனாகவே இந்த சமூக இயற்கை ஆர்வலர்கள் இருக்க வேண்டும்.

அதனால், நல்ல சமுதாயத்தை இவர்களால் படைக்க முடியும் என்று கருதி, “**எல்லோரும் இன்புற்றிருப்பதுவே யன்றி வேறொன்றும் அறியேன் பராபரமே**!” என்ற தாயுமானவரின் தாய்க்கும் மேலான அந்த கருணையை கண்டு கனிந்து, கட்டாயம் நம் அனைவரையும் காப்பாற்றும் கடமை கொண்ட பல நல்லவர்கள், பொதுநல வழக்கு பதிந்து, இந்த பாரத தேசத்தையும், பாரத மக்களையும் பாதுகாக்கும்படி கனிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

நன்றி! 🙏

என்றும் அன்புடன்,

**சுவாமி பிரபஞ்சநாதன்.**

# விவேகமும் விழிப்புணர்வும் !

**(சுதந்திரம் நமது பிறப்புரிமை)**



**சுவாமி பிரபஞ்சநாதன்**